# “கணினிக்குத் தமிழ்க் கற்றுக் கொடுக்கும் இளைஞர்”

**நார்வே இங்கர்சால் செல்வராஜ் செவ்வி**

*நாம் என்ன தேடுகிறோம், கேட்கிறோம் என்பதைப் புரிந்து கொண்டு, நாம் கேட்பதற்கு முன்பே – நம் செயல்பாடுகளைக் கணித்து, கணினியே தன்னளவில் நமக்கு சில தீர்வுகளை வழங்கும்போது நாம் வியப்புக்குள்ளாகியிருப்போம். அதற்குப் பின்னணியாகச் செயல்படுவது, செயற்கை நுண்ணறிவு நிரல்கள் (Artificial Intellegence Programs). அதற்கு அடிப்படைத் தேவை அந்த மொழியின் புலமை! ஆங்கிலம் உள்ளிட்ட பல மொழிகளில் மொழிப் புலமையை கணினிகளே செழுமைப்படுத்திக் கொள்ளும் வகையில், அகராதிகள் – இலக்கணங்கள் ஆகியவை நிரல்களாக வடிவமைக்கப்பட்டு விட்டன. கணினியில் ஆங்கிலத்தில் எழுதும் ஒரு கட்டுரையை, கணினியே சரிபார்த்துக் கொள்ள முடியும். ஆனால், தமிழில் அவ்வாறான நிலை இல்லை! எனவே, கணினிக்கு – இணைய உலகிற்கு தமிழை – தமிழ்ச் சொற்களை – தமிழ் இலக்கணத்தைக் கற்றுக் கொடுக்க வேண்டிய தேவை இருக்கிறது. அந்தத் தேவையை, எவ்வித இலாப நோக்கமும் இன்றி - தன்னார்வலர்கள் பலரை ஒருங்கிணைத்துச் செய்து வருகிறார் நார்வே தமிழர் – இங்கர்சால் செல்வராஜ்!*

*தமிழ்க் கணினி ஆர்வலராக மட்டுமின்றி, தமிழ்ச் சமூகம் எதிர்கொள்ளும் சாகர்மாலா, மீத்தேன், ஐட்ரோகார்பன், மீனவர் பாதுகாப்பு போன்ற பல சிக்கல்கள் குறித்து அவ்வப்போது காணொலிகள்*

*வெளியிட்டு விழிப்புணர்வு ஏற்படுத்தி வருபவர். சற்றொப்ப ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்ட தமிழ்ச் சொற்களை – பல தமிழ் அகராதிகளை இணையத்தில் இணைத்து வரும் அவரை, தமிழர் கண்ணோட்டம் இதழுக்காக மின்னஞ்சல் வழியே நேர்கண்டோம். இனி அவருடன்…*

**த.க : வணக்கம்! தங்கள் பணிகளுக்குப் பாராட்டுகள்! உங்களைப் பற்றிய சிறு அறிமுகத்தோடு தொடங்கலாமே..**

**இங்கர்சால்** : நான் அடிப்படையில், இயந்திரப் பொறியாளன். நாகை மாவட்டம் மயிலாடுதுறையில் பிறந்தேன். வள்ளுவர் வள்ளலார் வட்டம், மரப்போராட்டம், தமிழறி போன்ற இணையக் குழுமங்களை நடத்தி வருகிறேன். பள்ளிக்கல்வியை மயிலாடுதுறையிலும், பொறியியல் கல்வியை கோவையிலும் முடித்தேன். இப்போது கடந்த 14 ஆண்டுகளாக நார்வேயில் ஒரு எண்ணெய் நிறுவனத்தில் இயந்திர பொறியாளராக பணியாற்றி வருகிறேன். “பொருளாதார இட ஒதுக்கீடு சரியா தவறா?” எ என்ற புத்தகத்தை எழுதியுள்ளேன்.

**த.க : நீங்கள் செய்து வரும் தமிழ்க் கணினி சார்ந்தப் பணிகள் என்னென்ன?**

**இங்கர்சால்** : “கணினிக்கு கற்பிப்போம் தமிழை” என்ற முழக்கத்தை முன்வைத்து பல முன்னெடுப்புகளை நாங்கள் செய்து வருகிறோம். ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ் சொற்களை பலர் உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். அதை நூலாகவும் வெளியிட்டு உள்ளார்கள். அதை புத்தகமாக வெளியிட்டாலோ அல்லது இணையத்தில்

அகராதியாக வெளியிட்டாலோ கணினி அதனை கற்றுக் கொள்ளாது. அதை (Artificial Intelligence) செயற்கை நுண்ணறிவுக்கு கற்றுத்தர வேண்டும். அதற்கொரு நீண்டகால செயல்திட்டம் வேண்டும் என்ற குழப்பத்திலிருந்தபோது, முனைவர் தமிழ்ப்பரிதி அவர்கள் தங்களுக்கு 40 இலட்சம் தமிழ் சொற்களை கணினிமயமாகும் திட்டம் இருப்பதாகக் கூறினார். அதனை முதன்மைப்படுத்தி செயல்பட்டால் என்ன என சிந்தித்தோம். உடனடியாகப் பணிகளைத் தொடங்கி, அந்த இலக்கை நோக்கிப் பயணித்துக் கொண்டிருக்கிறோம்.

முதல்கட்டமாக படைப்பாக்கப் பொதும உரிமையின்கீழ் அறிவிக்கப்பட்டிருக்கும் (சிறிய அளவில் காப்புரிமை உள்ள) அகராதிகளை தேடுபொறி வசதியுடன் மின்னாக்கம் செய்து அதனை பொதும உரிமையின்கீழ் அறிவித்து அனைத்துத் தமிழர்களுக்கும் பொதுவுடமையாக்கும் பணியை செய்கிறோம். அடுத்த திட்டமாகக் கணினி நுண்ணறிவைப் பயன்படுத்தும் விக்கிப்பீடியா, கூகுள், மைக்ரோசாஃப்ட் போன்ற அனைத்து நிறுவனங்களுக்கும் தமிழைக் கொண்டு சேர்க்கத் திட்டமிட்டுள்ளோம்.

இணையத்தில் தமிழார்வம் கொண்ட தன்னார்வலர்கள் பலர் சேர்ந்து தமிழ் அகராதிகளைத் தொகுத்து மின்னுருவாக்கம் செய்யும் நிகண்டியம் என்ற ஒரு திட்டம் தொடங்கப்பட்டுள்ளது. அதன் பொருட்டு, பொதுவகத்திலுள்ள தமிழ் அகராதிகளை மெய்ப்புப் பார்த்து, மின்னூலாக்கம் செய்கிறோம்.

“வள்ளுவர் வள்ளலார் வட்டம்” என்ற அமைப்பை உருவாக்கி, நிகண்டியம் பணியை கையில் எடுக்கும்

முன் தமிழ் விக்சனரியில் இருக்கும் தமிழின் சொற்களின் எண்ணிக்கை 3,49,474. அயல்மொழி விக்சனரிகளின் சொற்களின் எண்ணிக்கையில் ஒப்பீட்டுப் பார்த்தால், அப்பட்டியலில் தமிழ் 19 ஆவது இடத்தில் இருந்தது. ஆங்கிலம், மலகாஸி, பிரஞ்சு, ரஷியன், செர்போ-குரோசியம், ஸ்பானிஷ், சீன, ஜெர்மன், குர்திஷ், டச்சு, ஸ்வீடிஷ், போலிஷ், லிதுவேனியன், கிரேக்கம், இத்தாலிய, காடலான், பின்னிஷ், ஹங்கேரியன் மொழிகள் சொற்களின் எண்ணிக்கை நமக்கு முன் இருக்கிறது.

தமிழ்ச் சொற்களின் வளர்ச்சியே தமிழ் மொழியின் வளர்ச்சி என்று கருதுகிறோம். ஆகையால் நவீன உலகத்தில் உருவாகும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை உருவாக்குவதில் கவனம் செலுத்துகிறோம். இதற்கு முன்பு உருவாக்கப்பட்டு - வெறும் ஏட்டில் மட்டுமே இருக்கும் தமிழ்ச் சொற்களை டிஜிட்டல் முறைக்கு மாற்றுவது - அதாவது தேடுபொறி வசதியில் கிடைக்கும்படி வழிவகை செய்வது எங்கள் முதன்மையான இலக்கு! அதனை தான் இப்போது நாங்கள் செய்து வருகிறோம்.

### த.க : இந்தப் பணிகளைச் செய்தால் தமிழர்களுக்கு என்ன இலாபம்?

**இங்கர்சால்** : பல தமிழ் இலக்கியங்கள் இப்போது நம்மிடம் இல்லை. பல சொற்கள் இப்போது நம் பயன்பாட்டில் இல்லை. நாளை காகிதம் இல்லாத உலகத்தில் அப்படி எதுவும் தொலைந்து விடக்கூடாதல்லவா? எனவே, இந்தப் பணியால் தமிழ்க் கணினி இருக்கும் காலம் வரை தமிழ்ச் சொற்கள் அழியவே அழியாது! நமது அடுத்த

தலைமுறை பிள்ளைகளுக்கு தமிழைக் கற்றுத் தர நாம் யாரையும் வேண்டி நிற்க வேண்டியதில்லை

தமிழ் அழியாமல் இருப்பதற்கும் அடுத்த தலைமுறைக்கு அதனை முழுவதுமாக கடத்திச் செல்வதற்கும் இது பெரிதும் பயன்படும். இதுவே தமிழுக்கு பெரும் பயன் என்று தனிப்பட்ட முறையில் நான் நம்புகிறேன். இதனை செய்தால் அனைவருக்கும், அனைத்துத் தமிழர்களுக்கும் பெருத்த இலாபம்! தமிழர்களுக்கு மட்டுமல்ல பிற மொழியினர் தமிழ் மொழியை அறிந்து கொள்ளவும் இது பெரிதும் பயன்படும். ஒட்டுமொத்த உலகத்துக்கே தமிழை அணுக மிகச்சரியான பாலமாக இருக்கும் இந்த முயற்சி!

**த.க : இதைச் செய்ய வேண்டுமென உங்களுக்கு எப்போது சிந்தனை உதிர்த்தது?**

**இங்கர்சால்** : கடந்த 2018இல் சனவரி 18 அன்று, நார்வே கிரீம்ஸ்டட் பல்கலைக்கழகத்தில் இருக்கும் ரோபோட்டிக் ஆராய்ச்சி நிறுவனத்திற்கு சென்றிருந்தேன். அங்கு இருந்த ரோபோ, என்னைப் பார்த்து எனது வயது, எடை போன்றவற்றை கூறியது. நான் அதனிடம் தமிழில் பேசினேன். அதற்கு தமிழ் தெரியவில்லை, எல்லோரும் என்ன பேசினீர்கள் என்று கேட்டார்கள். நான் என் தாய் மொழியில் பேசினேன் அதற்கு புரியவில்லை என்றேன். சிரித்தார்கள். ஒரு நாள் இதுவும் தமிழ் பேச வேண்டும் என்று எனக்கு சிந்தனை கிளைவிட்டது. அதனை நோக்கி நாம் ஏன் பயணிக்கக் கூடாது என்று எண்ணத் தொடங்கினேன். இணைய உலகில் தமிழ் மொழிச் சொற்கள்

நிறைந்திருந்தால், இது சாத்தியமாகும் அல்லவா? அன்று தொடங்கியதே எனது இந்தப் பயணம்!

**த.க : தொடக்கத்தில் இந்தப் பணிகளுக்காக உங்களுக்கு ஆதரவு கிடைத்ததா, இப்பொழுது தொடர்ந்து கிடைக்கிறதா?**

**இங்கர்சால்** : தமிழர்கள் பொதுவாக இனத்தின் மீதும் மொழியின் மீதும் பெரிய ஆர்வம் உடையவர்களாக இருக்கிறார்கள். எங்களது எல்லா நகர்வுகளுக்கும் தகுந்த உதவிகளும், ஊக்குவிப்புகளும் கிடைக்கின்றன. ஆனால் அவை போதுமானது அல்ல!

முகநூல் பதிவுகளில் வெறும் விருப்பம் (லைக்) – பகிர்வு (ஷேர்) செய்வது எதனையும் ஆக்கப்பூர்வமாக உருவாக்காது. நம்முடன் சேர்ந்து இத்திட்டங்களில் பயணிக்க பலர் தேவைப்படுகிறார்கள். அதனை அடைவது சற்று கடினமாக இருக்கிறது. தொடர்ந்து பொது அழைப்புகள் கொடுத்துக் கொண்டே இருக்கிறோம். அதில் இதுவரை 1,000 உணர்வாளர்கள் சேர்ந்திருக்கிறார்கள். ஆனால் 50 நபர்கள் மட்டுமே பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள். அதிலும் ஒரு சிலர் மட்டுமே தொடர்ந்து பணியாற்றுகிறார்கள். பாராட்டுபவர்களைவிட பங்காற்றுபவர்கள் ஆதரவே தேவை என்று நான் கருதுகிறேன்.

**த.க : இப்பணிகளால் நீங்கள் என்ன சாதித்துள்ளீர்கள்?**

**இங்கர்சால்** : இப்போது முதல் கட்டமாக – இணையத்தில் பதிவேற்றப்பட்டுள்ள தமிழ்ச் சொற்களின் எண்ணிக்கை பெருமளவில் உயர்ந்துள்ளது. எங்கோ ஏதோ ஒரு மூலையில் இருந்த

பல தமிழ் அகராதிகள், இன்று கணினி மயம் ஆக்கப்பட்டு அனைவருக்கும் பொதுவாக பகிரப்பட்டுள்ளது.

கலைச் சொல் அகராதி, வானநூல், பௌதிகம், புள்ளியியல், புவியியல், வாணிகவியல், உயிர் நூல், வரலாறுகள், பொருளாதாரம், ஐரோப்பிய தத்துவ சாத்திரம், வேதிப் பொது அறிவு, அறிவியல் அகராதி, வணிகவியல் அகராதி, கணிப்பொறி அகராதி, அறிவியல் கலைச்சொல் களஞ்சியம், விளையாட்டுத்துறையில் கலைச்சொல் அகராதி, சைவ சித்தாந்த அகராதி, மருத்துவம், சட்டம் போன்ற பல துறைசார்ந்த அகராதிகள் உருவாக்கப்பட்டு விட்டன. இதனை அனைவரும் பயன்படுத்தலாம்.

இதுவரை ஒரு இலட்சம் புதிய தமிழ் சொற்களை “க்ளாப்ஸ்” எனும் அகராதி தளத்தில் முதல்கட்டமாக பதிவேற்றியுள்ளோம். அதற்குமுன் அதில் ஒரு இலட்சம் தமிழ்ச் சொற்கள் மட்டுமே இருந்தது. இப்போது 2.5 இலட்சத்தைத் தாண்டிவிட்டது. இருபதாம் இடத்தை தாண்டி இருந்த தமிழ் இப்போது இந்தியை முந்தி 15 ஆம் இடத்திற்கு வந்துள்ளது. விரைவில், முதல் பத்துக்குள் வர வாய்ப்புகள் உள்ளது.

**த.க : உங்களுடன் இணைந்து பணி செய்ய என்ன தகுதி வேண்டும், யார் செய்யலாம், எப்படி செய்ய வேண்டும்?**

**இங்கர்சால்** : படிக்காதவர்கள் முதல் முனைவர்கள் வரை அனைவரும் இதில் எங்கள் பணிகளில் பங்குகொள்ளலாம். தமிழ் நூல்களை பி.டி.எஃப். கோப்பு வடிவில் ஸ்கேன் செய்ய எந்த ஒரு படிப்பறிவும்

தேவையில்லை! சற்று எழுதப்படிக்க தெரிந்தவர்கள் தட்டச்சு செய்யலாம். தமிழை நன்கு தெரிந்தவர்கள் பிழைகள் இருக்கிறதா என்பதை பார்க்கலாம்.

எந்திரவியல் (ரோபோட்டிக்ஸ்), நுண்தொழில்நுட்பவியல் (நேனோ டெக்னாலஜி), கைப்பேசி தொலைத்தொடர்பு இயந்திரவியல் (மொபைல் கம்யூனிகேஷன் மெக்கட்ரானிக்ஸ்) போன்ற பல்வேறு வளர்ந்து வரும் துறைகளுக்கு சொல் அறிஞர்கள் புதிய சொற்களை உருவாக்கிப் பகிரலாம்.

நிரல்கள் எழுதும் கணினி மென்பொறியாளர்கள் (ப்ரோக்ராமிங் சாப்ட்வேர் இன்ஜினியர்கள்) சிறுசிறு நிரல்கள் (ப்ரோக்ராம்) எழுதி செயல்பாடுகளை எளிமைப்படுத்த உதவலாம். “போட்டோஷாப்” மென்பொருள் தெரிந்தவர்கள் படங்களை இரண்டாகப் பிரித்து தரலாம். பொருளியல் உதவி செய்ய முடிந்தவர்கள் உதவினால் தன்னார்வலர்களை மட்டும் நம்பி இல்லாமல் சிலரை பணிக்கு அமர்த்தி, வேலையை மிக வேகமாக முடிக்கலாம். இந்த செயல்பாடுகளுக்கு யார் வேண்டுமென்றாலும் அழைப்புக் கொடுத்து உதவலாம். எல்லாவற்றையும்விட இதில் பங்கு பெறுபவர்களை பாராட்டி ஊக்குவித்து உதவலாம்!

## த.க : தமிழ்நாடு அரசு என்ன செய்ய வேண்டுமென எதிர்பார்க்கிறீர்கள்?

**இங்கர்சால்** : தூய தமிழ் என்பது இலக்கண இலக்கிய அடிப்படையில் அமைவது. அவை அனைத்தையும் அறிந்த ஒரு சில தமிழ் ஆசிரியர்களை மட்டும் நம்பி மொத்த தமிழினமும் இல்லாமல் அதற்கென தனித்த மென்பொருள் (சாப்ட்வேர்) உருவாக்கி அனைவரும்

அதைப் பயன்படுத்திக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும். தமிழுக்கென்று முழுமையான எழுத்துப் பிழை திருத்தி (ஸ்பெல்லிங் செக்கர்) கூட இல்லை! இதில் இலக்கணப்பிழை கண்டுபிடிப்பது, பிறமொழிச் சொல்லுக்கு நிகரான சரியான தமிழ் சொற்களை பரிந்துரை செய்வது போன்ற அனைத்தையும் ஒருங்கிணைத்து தொல்காப்பிய இலக்கண முறைப்படி மென்பொருள்கள் உருவாக்கப்பட வேண்டும்.

தமிழ்ச் சொல்லாய்வு அறிஞர்கள் வெறும் சொற்ப எண்ணிக்கையில் மட்டுமே இருக்கிறார்கள். நாளை அவர்களுக்குப் பிறகு, புதிய தமிழ்ச் சொற்களை உருவாக்கும் பணியில், ஒரு வெற்றிடம் வந்துவிடக்கூடாது!

ஆகையால் தமிழின் அனைத்து இலக்கணங்களையும் கற்றுத் தெளிந்து சரிபார்ப்பதோடு, புதிய தமிழ் சொற்களையும் உருவாக்கும் திறன் கொண்ட மென்பொருட்களை (சாப்ட்வேர்) தமிழ்நாடு அரசு, அதற்குத் தகுந்த வல்லுநர்களைக் கொண்டு உருவாக்க வேண்டும். பிறமொழி எழுத்துக்கள் மற்றும் சொற்களை நீக்கி, எளிமையான தனித்தமிழ் நடையில் தமிழ்க் கட்டுரைகளை மாற்றும் வடிவில் அந்த மென்பொருள் திறன்மிக்கதாக இருக்க வேண்டும்.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம்கூட முழுவதும் கணினி மயமாக்கப்பட்ட நிலையில், பல ஆண்டுகளாக அது வெளியிடப்படாமல், வெறும் சோதனை நிலையிலேயே (டெமோ வெர்ஷனில்) இருக்கிறது. எனவே, அந்தச் சொற்கள் கூகுள் தேடுபொறியில் வருவதில்லை. அதனை முதலில்

வெளியிட வேண்டும். தமிழ் சொல் உருவாக்க தனித்துறை ஒன்றை அரசு உருவாக்கி செயல்பட வேண்டும்.

**த.க : தமிழ் அமைப்புகளுக்கு ஏதேனும் கோரிக்கை உங்களிடமிருந்து இருக்கிறதா?**

**இங்கர்சால்** : உலகெங்கும் இருக்கும் தமிழ் சங்கங்களில் பலர், பெருமளவு கேளிக்கை நிகழ்ச்சிகளுக்குத்தான் பணத்தையும், ஆற்றலையும் செலவிடுகிறார்கள். ஆனால் இவை போன்ற ஆக்கப்பூர்வமான தமிழ் மொழி வளர்ச்சித் திட்டங்களுக்கு அவர்கள் ஆதரவு தராமல் இருப்பது வருந்தத்தக்கது. இதுவரை ஒரு தமிழ் சங்கம்கூட, இம்முயற்சியில் நாங்களும் பங்களிப்பு செய்கிறோம் என்று முன்வரவில்லை.

தமிழ் அமைப்புகளில் ஒரு சாரார் போராட்டத்தில் மட்டும் நேரத்தை செலவிடுகிறார்கள். அவர்களுக்கு நான் வைக்கும் வேண்டுகோள் இடைப்பட்ட நேரத்திலாவது நம் முன்னோர் செய்த செயல்களை நம்மில் சிலர் செய்ய வேண்டும். அவர்களுக்கு நீங்கள் ஆதரவு அளிக்க வேண்டும்.

**த.க : உங்கள் இலக்கு என்ன?**

**இங்கர்சால்** : தமிழர்களுக்கு என்று தனித்த கட்டிடக்கலை, வரைகலை, திரைக்கலை, இசை என்று பலவும் உள்ளதை நாம் சான்றுகளோடு நிறுவ வேண்டும். எல்லாவற்றையும் இறந்த காலத்தில் மட்டும் குறிப்பிட்டு வாழ்ந்து விடுதல் சரியாகாது! நிகழ்காலத்தில் அதனை நாமும் செய்ய வேண்டும்.

திருக்குறளுக்கு இங்கு ஆயிரம் விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால் ஒவ்வொரு குரல் எழுதப்படும்போது ஐயன் திருவள்ளுவரைச் சுற்றி என்ன நடந்தது என, திருக்குறள் உருவான சூழலை யாரும் எழுதவில்லை. நமது வரலாறுகள் திரைப்படங்களாக உருவாக்கப்படவில்லை. இதனை திரைத்துறையினர் செய்யலாம். நமது கட்டிடக்கலை நவீன உலகில் இல்லை. இதனை கட்டடப் பொறியாளர்கள் (சிவில் இன்ஜினியர்) செய்யலாம். நமது அனைத்து இலக்கணமும் கணினியில் இல்லை. இதனை கணிப் பொறியாளரும் தமிழறிஞர்களும் இணைந்து செய்யலாம்.

இவற்றை செய்ய இயலாதவர்கள், தங்களால் இயன்ற பொருளியல் உதவியை நல்கலாம். எல்லாவற்றையும் எல்லாரும் செய்துவிட முடியாது. ஒரு சிலப் பணிகளை சில தமிழ் சங்கங்கள் தத்தெடுத்து செய்யலாம். எடுத்துக்காட்டாக, கைப்பேசியில் தமிழ் இல்லை என்ற குற்றச்சாட்டு பலருக்கு இருக்கிறது. கைப்பேசி கையேடு (மொபைல் மேனுவல்) இணையத்தில் கிடைக்கிறது. அதில் இருக்கும் கலைச் சொற்களை தமிழில் உருவாக்கி அந்தந்த நிறுவனங்களுக்கு வேண்டுகோள் வைக்கலாம். இவை போன்ற பலவற்றை யார் வேண்டுமென்றாலும் செய்யலாம். நோக்கமும் இருந்தால் அனைத்தும் சாத்தியம்!

தமிழ் மொழிக் கல்வியை தொடர்ந்து வலியுறுத்தும் நாம், நாம் பயணிக்கும் பிற துறைகளில் தமிழ் எந்த அளவுக்கு இருக்கிறது என்பதனை பெரிதும் கண்டுகொள்வதில்லை. ஒரு அறிவியல் ஆய்வுக்கட்டுரையை தமிழில் மொழிபெயர்ப்பது இன்றைய சூழலில் மிகவும் கடினமான ஒன்று.

அதற்குக் காரணம் ஆங்கில சொற்களுக்கு இணையான தமிழ் சொற்கள் உருவாக்கப்படாததே! மற்றொன்று உருவாக்கியவற்றையும் நாம் இன்னும் கணினிக்குள் கொண்டுவரவில்லை! இந்த இரண்டையும் செய்துவிடவேண்டும் என்ற நாங்கள் பெரும் முனைப்போடு செயலாற்றி வருகிறோம்.

அடிப்படைக் கல்வி தமிழில் அமைய வேண்டும் என்று வலியுறுத்தும் நாம், நமது துறைசார்ந்த எந்த ஒரு ஆய்வுக் கட்டுரையையும் மொழிபெயர்க்க முடியாத நிலை இருப்பதை பெரிதாக கண்டுகொள்வதில்லை அதனை உடைத்து அனைத்தையும் தமிழ் உருவாக்கும் நிலைக்கு உயர வேண்டும் என்றே இதனை தொடங்கினோம். “கணினிக்கு கற்பிப்போம் தமிழை” என்று இதற்குப் பெயரிட்டோம். இதுவரை 15 அகராதிகளை கணினி மயமாக்கி உள்ளோம்.

ஒரு ஓலைச் சுவடி 200 ஆண்டுகள் தான் இருக்கும் என்கிறார்கள். அப்படி என்றால் நம்மிடம் இருக்கும் பல இலக்கிய ஓலைச்சுவடிகள் ஏதோ சில தமிழ் ஆர்வலர்களால் தொடர்ந்து புதிதாக புதிய ஓலைகளில் எழுதப்பட்டு கொண்டே இருந்திருக்கிறது என்பதே உண்மை! அதைத்தான் நாங்கள் இப்போது செய்கிறோம். உறையிலிருந்து புத்தகத்திற்கு வந்ததை கணினிக்கு கொண்டு செல்கிறோம். அதனை அந்தக் கணினிக்கு பயிற்றுவிக்கும் அடுத்த கட்டத்தை நோக்கியும் பயணிக்க இருக்கிறோம்.

**த.க : மகிழ்ச்சி, தங்கள் பணிகள் தொடர்ந்து சிறக்க வாழ்த்துகள்!**

**இங்கர்சால்** : நன்றி!